



# எங்கள் குலதெய்வம்

இஃது
ஸ்ரீலஸ்ரீ யோகானந்தேந்திர சரஸ்வதி சுவாமிகள்
பாதசேகரரான



தேவகோட்டை
சிவபூசை

**சித. அரங்கநாதஞ் செட்டியாரால்**

கோலாலம்பூர்
பப்ளிசிட்டி அண்டு சர்விஸ் அச்சியந்திரசாலையில்
பதிப்பிக்கப்பெற்றது.

பிரசோற்பத்தி-௵ பங்குனி-௴
1932-௵ மார்ச்சு-௴

14-2

உ

சிவமயம்.

கணபதிதுணை.

# முகவுரை.



இவ்வுலகின்கண் ஸர்வேச்வரனால் சிருஷ்டிக்கப்பெற்ற அண்டஜம் ச்வேதஜம் உற்பிஜம் ஜராயுஜமாகிய நால்வகை யோனி எழுவகைத்தோற்றம் எண்பத்து நான்கு லக்ஷம் ஜீவ ராசிகளிற் சிரேஷ்டமானவை மானிடப்பிறவியேயாம்.

இப்பிறவியாகிய அரிய பேற்றினை யடைந்த மானிடர்கள் தர்மார்த்த காம மோக்ஷமென்னும் நான்குவித புருஷார்த் தங்களை அடைய வேண்டுவதேயாம்.

அம்மார்க்கத்தை அநுஷ்டிப்பதற்குத் துணைக்கருவியா யிருப்பவை இம்மானிட சுகசரீரமேயாம்.

இச்சரீரம் உள்ளபொழுதே இவ்வருமையாகிய மனிதப் பிறப்பை உண்டாக்கிய ஸர்வேச்வரனை மனசினாலே நினைத் தற்கும் வாக்கினாலே துதித்தற்கும் காயத்தினாலே வணங்கு தற்கும் அரிய நூல்களைக் கற்று அவரது புகழைப் பாடித் தோத்திரஞ் செய்து திருவடிநிழலையடைந்து பேரானந்தப் பெரும் பேற்றையடையவேண்டுவதேயாம்.

சித. ரா.

சிவமயம்.

கணபதிதுணை.



## கணபதிதுதி.

பொன்னிமயப் பிடியானை தருமானை முகத்தானைப் பொருவி
லானைச், சொன்னயஞ்சேர் தாரகத்தி னுருவானை யின்
பருளச் சோதியானைச், சென்னியிலா றுடையானைத்
தந்தையெனப் படைத்தானைத் திகழோராறு, மன்னு
முகன்றுணையானை வல்லையின் பத்தானை வணங்கி
வாழ்வாம்.

மோகமெனுங் கடல்கடந்து முத்தியெனுங் கரைகாண்பான்
முதிர்ந்தகாலாம், பாகமெனு மலர்கொண்டு பத்தியெ
னும் புனலாட்டிப் பரிந்து சாத்திச், சோகமெனப்
பாவித்துத் துரியமெனும் விளக்கேற்றிச் சோகநீங்கி,
யாகமெனுங் கோயிலின் கண்ணறிவென்னுங் கண
பதிக்கே யன்பு செய்வாம்.

உ

சிவமயம்.

# கணபதியின் திரு அவதாரம்.

சிவபெருமான் தமது தேவியாரோடு கைலைமலைச்சாரலில் உள்ள உய்யான வனத்தையடைந்தனர். அதிலுள்ள கொன்றை, கோங்கு, மந்தாரம், சண்பகம் முதலிய விருக்ஷங்களில் மலர்ந்திருந்த மலர்களின் அலங்காரங்களை யெல்லாம் பார்த்துக்கொண்டே வந்து, சிவபெருமான் தேவியாரோடு அங்கிருந்த சித்திரமண்டபத்திற்குள் சென்றனர் அம்மண்டபத்திற்குள் ஒரு பக்கத்திலிருந்த பளிங்கு மேடையின் மேல் மகாதேவரும் உமாதேவியாரும் அமர்ந்து சுவர்களில் எழுதியிருந்த சித்திரங்களைப் பார்த்துக்கொண்டே யிருந்தனர். அவைகளில் ஒன்று பிரணவ வடிவத்தை யானைகளின் உருவங்களில் அமைத்துக் காட்டியது. சிவபெருமானும் உமாதேவியாரும் அவ்வுருவத்தைச் சற்று நிதானித்து அன்போடு பார்த்தனர். அப்போது அந்தப்பிரணவ சொரூபத்தினின்றும் கோடி சூரியர்கள் ஒன்று சேர்ந்து உதயஞ் செய்தது போல ஒரு ஜோதி தோன்றிற்று. அதன் மத்தியினின்றும் யானை முகத்தோடு வெண்ணிறமேனியும் நான்கு கைகளும் மூன்று கண்களும் அதிக பராக்கிரமமும் உள்ளவராய் கணேசமூர்த்தி குழந்தையுருவாய் வெளிப்பட்டுச் சிவபெருமானையும் உமாதேவியாரையும் பணிந்தார்.

உடனே அவ்விருவரும் ஆனந்தங்கொண்டு விநாயகமூர்த்தியைப் பரிவோடு எடுத்து அணைத்து உச்சி மோந்து உள்ளம் பூரித்து அவருக்குக் கணபதி என்று பெயரிட்டுத் தங்கள் மடியின்மீது வைத்துக் கொண்டனர். பின்னர், சிவபெருமான் அச்சித்திரமண்டபத்தைவிட்டு உமாதேவியார் கணபதியைக் கையிலேந்திக் கொண்டுவர கைலாயம் அடைந்தனர்.

அப்படிப் பிள்ளையார் தோன்றியகாலம் ஆவணிமாதம். பூர்வபக்ஷம் சதுர்த்தி கூடிய சுபதினமாகும். அன்றைத் தினம் சந்திரன் அஸ்த நக்ஷத்திரத்தில் சஞ்சரித்தான். இத்தினத்தில்தான் பிள்ளையார் சதுர்த்தி விரதம்.

உ

சிவமயம்.

# விநாயகபரத்துவம்.

விநாயகரென்பது தாமே யாவர்க்கும் பெருந்தலைவராய்த் தமக்கொரு தலைவர் இல்லாதவர் எனப் பொருள்படும்.

கணபதியென்பதும் கணங்களுக்குத்தலைவரென அப்பொருளையே குறிக்கும்.

கணங்கள்:—சிவகணம், தேவகணம், முனிகணம், சித்தகணம், வித்தியாதரகணம் முதலியனவாம்.

விநாயகவடிவம். ஓங்கார சொரூபம். ஓங்காரம் யானையின் முகம் போலவும் வலம்புரிச்சங்கு போலவும் வடிவுள்ளதாகும். அதனால் விநாயகக்கடவுள் யானையினது முகம் போன்ற முகமுள்ளவராக எண்ணப்படுகின்றார்.

ஓங்காரமாகிய பிரணவம் ஈசுரதத்துவத்திலிருக்கும் சிவத்தினது உருவத்திருமேனியும். ஈசுரதத்துவத்திலுள்ள அத்திருமேனியின் மகேசுரவடிவமுமாம். அம்மகேசுவர குமாரராய் எண்ணப்படும் விநாயகக்கடவுளும் அந்தஈசுரதத்துவத்திலேயேயிருப்பர். விநாயகக்கடவுளுடைய வடிவம் மாயா காரியமன்று. காரியவடிவமாம். காரியவடிவமாவது சத்தியின் வியாபக பேதங்களாகிய அருட்குணங்களுள் இன்னது இன்னது, இன்ன இன்ன அவயவமெனப்பாவிக்கப்படும வடிவமாம்.

விநாயகக் கடவுள் யானையினது முகம் போன்ற ஒரு முகமும். மூன்று விழியும். ஐந்து கரமும். பேழைவயிறும். இரண்டு பாதமும். உள்ளவரென்றும்; கரங்களில் அங்குசபாசமும் அபயவரதமும் ஒரு கொம்பும் மோதகமும் உடையவரென்றும் ஆகுவாகனத்தில் வீற்றிருப்பவரென்றும் பாவிக்கப்படுவர்.

அவ்வடிவில் நாத விந்து காரியமான ஓங்காரவடிவாயுள்ளது வேழமுகம். இச்சாஞானக்கிரியை என்னும் சத்திகள் வடிவுள்ளவை. விழிகள் சிருட்டி முதலிய ஐந்தொழில் செய்யும் சத்திகள் வடிவாயுள்ளவை ஐந்து கரங்கள்.

சர்வாண்டபிண்ட சராசரங்களையும் தன்னுள் வைத்து நடத்தும் சர்வவியாபகத்துவ சர்வகாரணத்துவ சத்திவடிவாயது. பேழை வயிறு. ஞானசத்திகிரியாசத்திகள் வடிவுள்ளவை. திருவடிகள் மற்றொன்றாலும் பேதிக்கவியலாத பேராற்றல் வடிவினது. அங்குசம் அவ்வாற்றலே வல்லபாசத்தி எனப் படுவது.

உயிர்கள் செய்யுங் கன்மங்களையேற்றுப் பயனளிக்கும் அருட்குணம் அபயவாதம். விந்து ஞானமாகி அபரஞானம் கொம்பு. பரஞானம் மோதகம்.

புருடனிலேபொருந்திய ஆன்மா ஆகுவாகனம். இவற்றுள் நாதம் தண்டாகாரமாகவும், விந்து வட்டவடிவமாகவும் இருத்தலாலும் அவ்விரண்டுஞ்சேர்ந்து பிரணவம் உதித்தலாலும் அதற்கிசைய நீண்ட துதிக்கையோடு வட்டவடிவமாயுள்ள யானை முகம்போன்ற ஒரு முகம் உண்டென்று பாவிக்கப்படும். இச்சாஞானம் கிரியாசத்திகள் அந்த நாதவிந்துகளில் விளங்குதலால் முகத்தில் அம்மூன்று சத்திகளும் நேத்திரவடிவாயிருக்கு மெனப் பாவிக்கப்படும்.

கரங்கள் தொழில் செய்யும் அவயவங்கள் ஆதலால் ஐந்தொழில் செய்யும் சத்திகள் ஐந்து கரங்களாகப் பாவிக்கப்படும்.

பேழைபல பொருள்களை அடக்கியிருப்பது வயிறு உற்பத்திக்குக் காரணமாயுள்ளது. அதனால் அவரது சர்வவியாபகத்துவ சர்வகாரணத்துவ சத்தி பேழை வயிறெனப்பாவிக்கப்படும்.

ஆன்மாவிற் பொருந்தி நின்று மல கன்ம மாயைகளைத் தொழிற்படுத்திப் போக மோட்சங்களைக்கொடுப்பன ஞான சத்தி, கிரியாசத்திகள். அதனால் அவ்விரண்டு சத்திகளும் இரண்டு திருவடிகளாகப் பாவிக்கப்படும்.

ஆன்மாவைப் பேதப்படுத்தும் மலகன்ம மாயைகள் கடவுளைப் பேதப்படுத்தமாட்டா. அவற்றாற் பேதப்படுத்தவியலாத பேராற்றலையுடையவர் கடவுள் அவரது அவ்வாற்றல் அங்குசமாகப் பாவிக்கப்படும்.—(ஆற்றல்-வல்லபம்)

அதனால் விநாயகர் வல்லபை சத்தியுடையரெனப்படுகின்றார். அவ்வல்லபமுடையகடவுள். மாயையிலிருந்து உயிர்களுக்குத் தநுகரண புவன போகங்களைத் தோற்றுவித்துக் கன்மத்தை நுகர்வித்து அவ்வாயிலாக மலகன்மங்களை நீக்குவாராகலின், அதன் பொருட்டுப் பரிக்கிரகித்த முதற்காரணமான மாயாபாசம் ஒரு கரத்தில் இருக்குமெனப் பாவிக்கப்படும்.

ஆன்மாக்கள் செய்யுங்கன்மங்களை ஏற்றுப் பயனளிப்பவர் அவரேயாதலால் அவரது அவ்வருட்குணம் அபயவரதங்களாகப் பாவிக்கப்படும். அபயகரத்தில் ஒரு கொம்பு இருக்கும். கொம்பு சிருங்கம் விந்து சிருங்கார ரேகையுடையது அதனாலது வைந்தவஞானமாகிய அபரஞானத்தைக் குறிக்கும்.

மலபரிபாகமும் இருவினை யொப்பும் சத்திநிபாதமும் உற்றகாலத்துக் குருவடிவாய் எழுந்தருளி அநுக்கிரகஞ்செய்து பரஞானங்கொடுப்பராதலால் அபரஞானம் மோதகமாகப்பாவிக்கப்படும்.

வரங்கொடுக்கும் வரதகரத்தில் அம்மோதகமிருத்தலுமதுபற்றியாம். நாதத்தின் வழியாகவே பரஞானம் விளைதலால் நாதவடிவான துதிக்கையால் மோதகத்தை எடுப்பதாகப் பாவிக்கப்படும்.

இனி ஆகுவாகனத்தின் பாவனை கூறுவாம். ஆகு, எலி. இவ்விடத்து எலியாகப் பாவிக்கப்படுவது ஆன்மா எலி பூமியில் ஊர்ந்து திரிந்து இரை நுகர்ந்து முடிவில் ஒருதுளை வழியே சென்று ஒடுங்கிச் செயலற்றிருக்கும். இப்படித் திரிதலே அதனியல்பாம். அதுபோலப் புருடனும் சாக்கிரத் தானத்திலிருந்து ஐம்புலவிடயங்களை நுகர்ந்து முடிவில் நடுநாடியாகிய சுழுமுனைவழியே போய் மூலதாரத்தில் ஒடுங்கி ஒரு செயலுமில்லாமல் கேவலத்திற்பட்டுத் தனித்திருப்பான். இப்படிக் கேவலசகலமடைதல் ஆன்மாவினியல்பாம். அதில் சாக்கிரத்தானம், பூமிபோலவும் சுழுமுனைநாடி, துளைவழிபோலவும் மூலாதாரத்துச் சென்று ஒடுங்கி யிருக்கும் புருடன், துளைவடியோடி யோய்ந்திருக்கும் எலிபோலவும்

உவமிக்க நிற்றலால் அதுநோக்கிப்புருடனை எலியென்று பாவிப்பர்.

இனி அம்மூலாதாரத்திருக்கும் மந்திரம் பிரணவம் அதற்கு அதிதேவதைவிநாயகர் அங்குள்ள ஆன்மாவுக்கு வழிபடும் கடவுள் அவ்விநாயகக்கடவுளே. தலைவரும் அவரே. அவர் அவ்வான்மாவிற் பொருந்தியிருப்பர். அவ்வுண்மை நோக்கியே விநாயகர் ஆகுவாகனமுடையவரென்று சொல்லப்படும். இப்பாவனை யோகாவத்தைக்குரியதாம்.

இவ்வாறு ஈசுரதத்துவத்தில் வைகும் விநாயகக்கடவுள் சத்திகாரியமான சிற்கனமேனியுடையவராய்ச் சிவகுமாரராய் விளங்குவர்.

மகேசுரவடிவம் தோன்றியபின் அதிலிருந்து தோன்றுதலால் விநாயகர் குமாரராக எண்ணப்பட்டார். அவர் சுத்தமாயா வுலகுக்கு அதிதெய்வம்.

இனி உலகந்தோன்றுங்காலத்து ஈசுரதத்துவத்தில்வைகும் அநந்ததேவரது கண்டத்திலிருந்து தோன்றிய கணபதியும் ஒருவருளர். அவர் சுத்தவித்தியாதத்துவத்தில் நந்திமுதலிய கணநாதருள் ஒருவராய் எண்ணப்பட்டு எழுந்தருளியிருப்பர். அசுத்தமாயாவுலகுக்கு அதிதெய்வம் அவரேயாம். அவரது திருமேனி வைந்தவம் அவரன்றி ஸ்ரீ கண்டபுவனத்திலே ஸ்ரீ கண்டபரமேசுரரது திருக்குமாரராய் வைகும் விநாயகக்கடவுளும் ஒருவருளர். அவரே பிரகிருதி புவனங்களுக்கு முதல்வர். அவர் கைலைபங்கிரியிலும் தேவர் முனிவர் முதலாயினோருக்கு அநுக்கிரகத்தின் பொருட்டுத் திருக்கோயில் கொண்டிருப்பர். தம்மை வழிபடும் அடியார்கள் பொருட்டு அவ்வப்பொழுது தோன்றி அருள் செய்தலும் அவரது பெருங்கருணைக்குணமாம். அவ்வாறு தோன்றிய திருவவதார நிகழ்ச்சிகள் பல. அவையெல்லாம் புராணங்கள்வாயிலாக உரைப்படும் மற்றைய விநாயக வடிவங்களும் அச் சிற்கனமேனிப்பிரானது வடிவபாவனை பெற்றுள்ளனவேயாம்.

ஈசுரதத்துவத்திலுள்ள விநாயகர் சுத்தவித்தியாதத்துவத்திலுள்ள விநாயகரை அதிட்டிப்பர். சிவசத்தியே மூவிடத்தும் நின்று நடத்துவதாம்.

இனி இவ்விநாயகவடிவத்தை யோகக்காட்சியுடையார் நேரிற்காண்பர். அல்லாதார் சரியைநெறி, கிரியை நெறிகளில் நின்று வழிபடப்பாலர். சரியை, கிரியைகளில் யோகநிலையின் அமைவுள் ஆலயத்தில் அவரது வழிபாடு செய்யப்படும். அங்கு ஆலயம் சரீரமாகவும் தூபிமூலாதார கமலமாகவும் அர்த்தமண்டபம், மகாமண்டபம், ஸ்நபனமண்டபம், தம்பமண்டபம், நிருத்தமண்டபம் என்பன; முறையே சுவாதிஷ்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆஞ்ஞை, என்னும் ஆதாரங்களாகவும் கர்ப்பக்கிரகத்து விளங்கும் விநாயகமூர்த்தி மூலாதாரத்து விளங்கும் மூர்த்தியாகவும் நந்தி, ஆன்மாவாகவும் பலிபீடம், ஆன்மாவைப் பந்தித்த மலபாசமாகவும் பலிகன்மமாகவும் துவஜஸ்த்தம்பம், சுழுமுனை நாடியாகவும யாகசாலை, நாபித்தானமாகவும் கருதப்படும். ஆலயவழிபாட்டில் அமைந்த குறிப்புகள் இன்னும் பலவுள. அதனால் அவ்வழிபாடு யோகவழிபாடு போன்றதேயாம்.

கணபதி யென்றிடக் கலங்கும் வல்வினை
கணபதி யென்றிடக் காலனுங் கைதொழும்
கணபதி யென்றிடக் கருமமாதலால்
கணபதி யென்றிடக் கவலை தீருமே.



உ

சிவமயம்.

முருகக் கடவுள் துணை.

# சிறப்புப்பாயிரம்.

ஆனைமுகவற்கிளைய ஐயா அருணகிரி
தேனனைய சொல்லான் றிப்புகழை—யானினைந்து
போற்றிடவு நின்னைப்புகழ்ந்திடவும் பொற்கமலஞ்
சாத்திடவு மோதிடவுந்தா.

ஞானம்பெறலாம் நலம்பெறலாம் எந்நாளும்
வானம் அரசாள வரம்பெறலாம்—மோனவீ
டேறலாம் யானைக்கிளையான் றிருப்புகழைக்
கூறினர்க்காமே யிக்கூறு.

வள்ளிமணவாளன் மயிலேறும் வள்ளல்தனைத்
தெள்ளுதமிழாற் புனைந்து சீர்பெறவே—உள்ளபடி
வைப்பாம் அருணகிரி வாழ்த்துந் திருப்புகழைக்
கற்பார் கரையேறுவார்.

உ

சிவமயம்.

முருகக்கடவுள் துணை.

ஏறுமயி லேறி விளை யாடுமுக மொன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுக மொன்றே
கூறுமடி யார்கள் வினை தீர்க்குமுக மொன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுக மொன்றே
மாறுபடு சூரரை வதைத்த முக மொன்றே
வள்ளியை மணம் புணர வந்தமுக மொன்றே
ஆறுமுகமானபொருள் நீயருளல் வேண்டும்.
ஆதியரு ணாசலம மர்ந்த பெருமாளே.

வேலுமயிலுந் துணை.

உ

சிவமயம்.

# திருப்புகழ் ஷோடசம்,

## விநாயகர் துதி.

கைத்தல நிறைகனி யப்பமொ டவல்பொரி
    கப்பிய கரிமுக    னடிபேணிக்
கற்றிடு மடியவர் புத்தியி லுறைபவர்
    கற்பக மெனவினை    கடிதேகு
மத்தமு மதியமும் வைத்திடு மரன்மகன்
    மற் பொருதிரள்புய    மதயானை
மத்தளவயிறனை உத்தமி புதல்வனை
    மட்டவிழ் மலர்கொடு    பணிவேனே
முத்தமி ழடைவினை முற்படுகிரிதனின்
    முற்பட எழுதிய    முதல்வோனே
முப்புர மெரிசெய்த அச்சிவ னுறைரதம்
    அச்சது பொடி செய்த    அதிதீரா
அத்துய ரதுகொடு சுப்பிரமணிபடும்
    அப்புனமதனிடை    யிபமாகி
அக்குறமகளுட னச் சிறு முருகனை
    அக்கணமணமருள்    பெருமாளே (1)

---

உனைத்தினந்தொழு திலனுன தியல்பினை
    உரைத்திலன் பல மலர் கொடு னடியிணை
உறப்பணிந்தில னொருதவமிலனுன    தருள்மாறு
உளத்து ளன்பினருறைவிட மறிகிலன்
    விருப்பொடுன் சிகரமும் வலம் வருகிலன்
    உவப்பொடுன் புகழ்துதி செய விழைகிலன்
        மலைபோலே
கனைத்தெழும்பக டதுபிடர் மிசைவரு
    கறுத்த வெஞ்சின மறலிதனுழையினர்
    கதித்தடர்ந்தெரிகயிறடு கதைகொடு
        பொருபோதே

கலக்குறாஞ்செய லொழிவற அழிவுறு
கறுத்துநைந்தல முறு பொழுதள வைகொள்
கணத்தி லென் பயமறமயில் முதுகினில்
வருவாயே

வினைத்தலந்தனி லலகைகள் குதிகொள
விழுக்குடைந்து மெயு குதகைச கழுகுண
விரித்தகுஞ்சிய ரெனுமவு ணரையமர் புரிவேலா
மிகுத்த பண்பயில் குயில் மொழி யழகிய
கொடிச்சி குங்கும முலைமுகடுழு நறை
விரைத்தசந்தன ம்ருகமத புயவரை
யுடையோனே

தினத்தினஞ் சதுர் மறை முனி முறை கொடு
புனற்சொரிந்தலர் பொதியவி னவரொடு
சினத்தை நிந்தனை செயுமுநி வர் தொழ
மகிழ்வோனே

தெனத் தெனத்தென எனவரி யளி நறை
தெவிட்ட அன்பொடு பருகுயர் பொழில் திகழ்
திருப்பரங்கிரி தனிலுறை சரவண
பெருமானே (2)

விறன் மாரனைந்து மலர்வாளி சிந்த
மிகவானி லிந்து வெயில்காய
மிதவாடைவந்து தழல் போல வென்ற
வினைமாதர் தந்தம் வசைகூறக்
குறவாணர் குன்றி லுறைபேதை கொண்ட
கொடிதான துன்ப மயல்தீரக்
குளிர்மாலையின்க ணணிமாலை தந்து;
குறைதீர வந்து குறுகாயோ
மறிமானுகந்த இறையோன் மகிழ்ந்து
வழிபாடுதந்த மதியாளா
மலைமாவுசிந்த அலைவேலை அஞ்ச
வடிவேலெறிந்த அதிதீரா
அறிவால்றிந்து னிருதாளிறைஞ்சும்
அடியாரிடைஞ்சல் களைவோனே

அழகானசெம்பொன் மயில்மேலமர்ந்து
அலைவாயுகந்த பெருமாளே (3)

தொந்தி சரிய மயிரே வெளிர நிறை
தந்த மசைய முதுகே வளைய யிதழ்
தொங்க ஒரு கைதடிமேல் வரமகளிர்
நகையாடித்
தொண்டுகிழ வனிவனு ரென விருமல்
கிண்கிணெனமுனுரையே குழறவிழி
துஞ்சு குருடு படவே செவிடு படு செவியாகி
வந்தபிணியு மதிலே மிடையுமொரு
பண்டிதனுமெ யுறுவேதனையுமிள
மைந்த ருடைமை கடனே தெனமுடுகு
துயர்மேவி
மங்கையழுது விழவே யம படர்கள்
நின்று சருவமலமே ஒழுகவுயிர்
மங்குபொழுது கடிதே மயிலின் மிசை
வரவேணும்

எந்தைவருக ரகுநாயக வருக
மைந்தவருக மகனே யினிவருக
என்கண்வருக எனதாருயிர் வருக அபிராமா
இங்குவருக அரசே வருகமுலை
உண்கவருக மலர் சூடிடவருக
என்று பரிவினொடு கோசலைபுகல வருமாயன்
சிந்தைமகிழுமருகா குறவரிள
வஞ்சிமருவுமழகா வமரர்சிறை
சிந்த அசுரர்கிளை வேரொடு மடிய அடுதீரா
திங்களரவு நதிசூடிய பரமர்
தந்தகுமர அலையே கரைபொருத
செந்திநகரி லினிதே மருவிவளர்
பெருமாளே (4)

நாதவிந்து கலாதி நமோ நம
வேதமந்த்ர சொரூபா நமோநம
ஞான பண்டித சாமீ நமோநம வெகுகோடி

நாமசம்புகு மாரா நமோ நம
போகஅந்தரி பாலா நமோநம
நாகபந்தம யூரா நமோநம பாகூரர்
சேததண்டவி நோதா நமோநம
கிதகிண்கிணி பாதா நமோநம
தீரசப்பிரம வீரா நமோநம கிரிராஜா
தீபமங்கள ஜோதி நமோநம
தூய அம்பல லீலா நமோநம
தேவகுஞ்சரி பாகா நமோநம அருள்தாராய்
ஈதலும்பல கோலால பூஜையும்
ஓதலுங்குண ஆசார நீதியும்
ஈரமுங்குரு சீர்பாத சேவையும் மறவாத
ஏழ்தலம் புகழ் காவேரி யால்விளை
சோழமண்டல மீதே மனோகர
ராஜ கெம்பிர நாடாளு நாயக வயலூரா
ஆதரம்பயி லாரூரர் தோழமை
சேர்தல் கொண்டவ ரோடேமு னாளினில்
ஆடல்வெம்பரி மீதேறி மாகயி லையிலேகி
ஆதியந்தவு லாவாசு பாடிய
சேரர் கொங்குவை காவூர் நனாடதில்
ஆவினன்குடி வாழ்வான தேவர்கள்
பெருமாளே (5)

அவனிதனிலே பிறந்து மதலை யெனவே தவழ்ந்து
அழகுபெறவே நடந்து இளைஞனாய்
அருமழலையே மிகுந்து குதலைமொழியே புகன்று
அதிவிதமதாய் வளர்ந்து பதினாறாய்
சிவகலைகளாகமங்கள் மிகவுமறையோது மன்பர்
திருவடிகளே நினைந்து துதியாமல்
தெரிவையர்களாசை மிஞ்சி வெகுகவலை யாயுழன்று
திரியுமடியேனை உன்றன் னடிசேராய்

மவுனஉபதேச சம்பு மதியறுகுவேணி தும்பை
மணிமுடியின் மீதணிந்த மகதேவர்

மனமகிழவேயணைந்து ஒருபுரமதாகவந்த
மலைமகள் குமாரதுங்க வடிவேலா
பவனி வரவேயுகந்து மயிலின் மிசையே திகழ்ந்து
படியதிரவே நடந்த கழல்வீரா
பரமபதமே செறிந்த முருகனெனவே யுகந்து
பழநிமலை மேலமர்ந்த பெருமாளே (6)

கருவினுருவாகிவந்து வயதளவிலே வளர்ந்து
கலைகள் பலவே தெரிந்து மதனாலே
கரியகுழல் மாதர் தங்கள் அடிசுவடுமேலலைந்து
கவலைபெரிதாகி நொந்து மிகவாடி
அரகரசிவாய வென்று தினமுநினையாமல் நின்று
அறுசமய நீதி யொன்றும் அறியாமல்
அசனமிடுவார்கள் தங்கள் மனைகள் தலைவாசல் நின்று
அநுதினமு நாணமின்றி அழிவேனோ
உரகபடமேல் வளர்ந்த பெரியபெருமாளரங்க
ருலகளவுமால் மகிழ்ந்த மருகோனே
உபயகுல தீபதுங்க விருதுக விராஜசிங்க
உறைபுகலி யூரிலன்று வருவோனே
பரவைமனை மீதிலன்று ஒரு பொழுது தூது சென்ற
பரமனருளால் வளர்ந்த குமரேசா
பகையசுரர் சேனைகொன்று அமரர்சிறைமீள வென்று
பழநிமலை மீதில் நின்ற பெருமாளே (7)

சரணகமலாலயத்தை அரைநிமிஷ நேரமட்டில்
தவமுறை தியானம்வைக்க அறியாத
சடகசட மூடமட்டி பவவினையிலேசனித்த
தமியன்மிடியால் மயக்கம் உறுவேனோ
கருணை புரியாதிருப்ப தெனகுறையிவேளை செப்பு
கயிலைமலை நாதர்பெற்ற குமரோனே
கடகபுய மீதுரத்ந மணியணிபொன் மாலைசெச்சை
கமழுமண மார்கடப்பம் அணிவோனே
தருணமிதையாமிகுத்த கனமதுறு நீள்சவுக்ய
சகலசெல்வ யோகமிக்க பெருவாழ்வு

நகைமைசிவ ஞானமுத்தி பரகதியு நீகொடுத்
    துதவிபுரிய வேணுனெய்த்த வடிவேலா
அருணதள பாதபத்ம மதுநிதமுமேதுதிக்க
    அரியதமிழ் தானளித்த மயில்வீரா
அதிசயமநேகமுற்ற பழநிமலைமீதுதித்த
    அழகதிருவேரகத்தின் முருகோனே. (8)

நாவேறுபாமணத்த பாதாரமே நினைத்து
    நாலாறு நாலுபற்று வகையான
காலாறு மாகமத்தினாலாய ஞானமுத்தி
    நாடோறு நாலுரைத்த நெறியாக
நீவேறெனாதிருக்க நான்வேறெனாதிருக்க
    நேராகவாழ்வதற்குன் அருள்கூர
நீடார்சடாதரத்தின்மீதே பராபரத்தை
    நீகாணெனாவனைச் சொல் அருள்வாயே
சேவேறு மீசர்சுற்ற மாஞானபோதபுத்தி
    சீராகவேயுரைத்த குருநாதா
தேரார்கள் நாடுசுட்ட சூரார்கள் மாளவெட்டு
    தீராகுகா குறத்தி மணவாளா
காவேரி நேர்வடக்கிலேவாவி பூமணத்த
    காவார்சுவாமி வெற்பின் முருகோனே
கார்போலு மேனிபெற்ற மாகாளிவாலைசத்தி
    காமாரி வாமிபெற்ற பெருமாளே. (9)

பாதிமதி நதிபோது மணிசடை
    நாதரருளிய குமரேசா
பாகுகனி மொழிமாது குறமகள்
    பாதம் வருடிய மணவாளா
காதுமொருவிழி காகமுறவருள்
    மாயனரிதிரு மருகோனே
காலனெனை யணுகாமலுனதிரு
    காலில் வழிபட அருள்வாயே
ஆதிஅயனொடு தேவர்சுரருல
    காளும் வகையுறு சிறைமீளா

ஆடுமயிலினி லேறியமரர்கள்
குழுவரவரும் இளையோனே
சூதமிகவளர் சோலைமருவுசு
வாமி மலைதனில் உறைவோனே
சூரனுடலற வாரிசுவறிட
வேலைவிடவல பெருமாளே. (10)

கனகசபைமேவு மெனது குருநாத
கருணை முருகேசப் பெருமாள்காண்
கனகநிறவேதன பயமிடமோது
கரகமல சோதிப் பெருமாள்காண்
வினவுமடியாரை மருவிவிளையாடு
விரகுரசமோகப் பெருமாள்காண்
விதிமுநிவர்தேவ ரருணகிரிநாதர்
விமலசர சோதிப் பெருமாள்காண்
சனகிமணவாளன் மருகனெனவேத
சதமகிழ் குமாரப் பெருமாள்காண்
சரணசிவகாமி யிரணகுலகாரி
தருமுருகநாமப் பெருமாள்காண்
இனிதுவனமேவு மமிர்தகுறமாதொ
டியல் பரவுகாதற் பெருமாள்காண்
இணையிலிபதோகை மதியின்மகளோடு
மியல்புலியுர் வாழ்பொற் பெருமாளே. (11)

தேனுந்து முக்கனிகள் பால் செங்கருப்பிளனீர்
சீரும்பழித்த சிவம் அருளூறத்
தீதும்பிடித்தவினை ஏதும்பொடிப்பவுறு
சிவன் சிவச்சொரூபம் எனநாடி
நானென்பதற்று யிரோடேனென்பதற்று வெளி
நாதம்பரப்பிரம ஒளிமீதே
ஞானஞ்சுரப்பமகிழானந்த சித்தியொடே
நானுங்களிக்குநிலை அருள்வாயே
வானந்தழைக்கவடியேனுஞ் செழிக்கவயன்
மாலும்பிழைக்கவலை விடமாள

வாருங்கனத்தனைமை யாளுந்தகப்பன் மழு
மானின் கரத்தனருள் முருகோனே
தானங்சனத்ததனறைண்டு சுற்றிமகு
தாளுங்கடபமலர் அணிமார்பா
தானங்குறித்து வெயையாளுந்திருக்
கயிலை சாலுங்குறத்திமகிழ் பெருமாளே. (12)

கைத்தருண சோதியத்தி முகவேத
கற்பக சகோதரப் பெருமாள்காண்
கற்புசிவகாமி நித்யகலியாணி
கத்தர்குருநாதப் பெருமாள்காண்
வித்துருப ராமருக்குமருகான
வெற்றி மயில்பாணிப் பெருமாள்காண்
வெற்புளகடாக முட்ட திரவிசு
வெற்றியயில்வாகப் பெருமாள்காண்
சித்ரமுகமாறு முத்துமணிமார்பு
திக்கினிநிலாதப் பெருமாள்காண்
தித்திமிதி திகெஞெத்திவிளையாடு
சித்திரகுமாரப் பெருமாள்காண்
சுத்தவிரசூரர் பட்டவிழவேலை
தொட்டக விராஜப் பெருமாள்காண்
துப்புவளியோடு மப்புலியூர்மேவு
சுத்தசிவஞானப் பெருமாளே. (13)

வாதினையடர்ந்த வேல்விழியர் தங்கள்
மாயமதொழிந்து தெளியேனே
மாமலர்கள் கொண்டு மாலைகள் புனைந்து
மாபதமணிந்து பணியேனே
ஆதியொடு மந்தமாகிய நலங்கள்
ஆறுமுகமென்று தெரியேனே
ஆனதனிமந்த்ர ரூபநிலைகொண்ட
தாடுமயிலென்ப தறியேனே
நாதமொடுவிந்து வானவுடல்கொண்டு
நாலிலமலைந்து திரிவேனே

நாகமணிகின்ற நாதனிலைகண்டு
　　நாடியதில் நின்று　　　　தொழுகேனே
சோதியுணர்கின்ற வாழ்வுசிவமென்ற
　　சோகமது தந்து　　　　எனையாள்வாய்
சூரர்குலம்வென்று வாகையொடுசென்று
　　சோலைமலைநின்ற　　　　பெருமாளே. (14)

வங்காரமார்பிலணி தாரொடுயர்கோடசைய
　　கொந்தாரமாலைகுழ லாரமொடு தோள்புரள
　　வண்காதி லோலைகதிர் போலவொளி வீசஇதழ்
　　　　மலர்போல
மஞ்சாடு சாபநுதல் வாளனைய வேல் விழிகள்
　　கொஞ்சார மோகக்கிளி யாக நகைபேசியுற
　　வந்தாரை வாருமிரு நீருற வெணுசைமய
　　　　லிடுமாதர்
சங்காளர் சூது கொலை காரர்குடி கேடர் சுழல்
　　சிங்காரத் தோளர்பண ஆசை யுளர் சாதியிலர்
　　சண்டாளர் சீசியவர் மாயவலை யோடியேன்
　　　　உழலாமல்
சங்கீதை நாத மொடு கூடி வெகு மாயையிருள்
　　வெந்தோட மூல அழல் வீச உப தேசமது
　　தன்காதில் லோதியிரு பாதமலர் சேர அருள்
　　　　புரிவாயே
சிங்கார ரூப மயில் வாகனந மோ நமென
　　கந்தாகு மாரசிவ தேசிக நமோ நமென
　　சிந்தூர பார்வதிசு தாகர நமோ நமென
　　　　விருகோதை
சித்தான சோதிகதிர் வேலவ நமோ நமென
　　கங்காள வேணிகுரு வானவ நமோ நமென
　　திண்சூர ராழிமலை தூள் படவை வேலைவிடு
　　　　முருகோனே
இங்கித வேதபிர மாவைவிழ மோதியொரு
　　பெண்காதலோடுவன மேவிவளி நாயகியை

இன்பான தேனிரச மார்முலைவி டாதகர
மணிமார்ப
என்போனர் காதல்கொடு காதல்கறியே பருகு
செங்காடு மேவி பிரகாசமயில் மேலமுகோ
டென்காதல் மாலைமுடி ஆறுமுகவா வமரர்
பெருமானே (15)

திருமகளுலாவு மிருபுயமுராரி
திருமருகநாமப் பெருமாள்காண்
செகதலமும் வானுமிகுதி பெறுபாடல்
தெரிதருகுமாரப் பெருமாள்காண்
மருவுமடியார்கள் மனதில் விளையாடு
மரகதமயூரப் பெருமாள்காண்
மணிதரளம் வீசியணி யருவிகுழ
மருவுகதிர் காமப் பெருமாள்காண்
அருவரைகள் நீறுபட அசுரர்மாள
அமர் பொருதவீரப் பெருமாள்காண்
அரவுபிறைவாரி விரவுசடைவேணி
அமலர் குருநாதப் பெருமாள்காண்
இருவினையிலாத தருவினைவிடாத
இமையவர்குலேசப் பெருமாள்காண்
இலகுசிலைவேடர் கொடியினதி பார
இருதனவிநோதப் பெருமானே (16)



சிவமயம்.

குமரமலை வீற்றிருக்கும் எங்கள் குல தெய்வம்
தேவகுஞ்சரியை மணம்புணர்ந்ததெங்கள் குல தெய்வம்
சமணர்களைக் கழுவில்வைத்த தெங்கள் குல தெய்வம்
சிவஷண்முகமாய் வந்துதித்த தெங்கள் குல தெய்வம்
பழநிமலையில் வீற்றிருக்கும் எங்கள் குல தெய்வம்
சிவபக்தர்களைக் காத்தருளும் எங்கள் குல தெய்வம்
பண்டாரம்போலிருக்கும் எங்கள் குல தெய்வம்
தேவபச்சை மயிலேறிவரும் எங்கள் குல தெய்வம்
ஆண்டிவேடம் பூண்டிருக்கும் எங்கள் குல தெய்வம்
அண்டினோரை யாதரிக்கும் எங்கள் குல தெய்வம்
வேலாயுதந்தரித்த தெங்கள் குல தெய்வம்
வடிவேல் முருகநாமம் படைத்த தெங்கள் குல தெய்வம்
விபூதி தரித்திருக்கும் எங்கள் குல தெய்வம்
வீறுமயிலேறிவரும் எங்கள் குல தெய்வம்
ஆறுமுகமான பொருள் எங்கள் குல தெய்வம்
ஆறுபடை வீடுடைய தெங்கள் குல தெய்வம்
சிவனுருக்குபதேசித்த தெங்கள் குல தெய்வம்
சிவசுப்பிரமணியப் பேருடைய தெங்கள் குல தெய்வம்

---

என்னப்பனே நீ வா வா வா
ஷண்முகனே வா வா
ஆறுபடை வீடுடைய ஐயா நீ வா வா
இப்போவா இங்கேவா என்முன்னே வா வா
எளியேனைக் காத்தருளும் ஏழைபங்கா வா வா
செப்பாதஞான ரஸத் தெள்ள முதே வா வா
சிவனார் மனங்குளிருந் தேசிகனே வா வா
எப்போதும் நான்மறையோர் எத்துருகா வா வா
ஏறுமயி லேறிவரும் எழிலுடனே வா வா

---

திருமால்மருகனே ஸுமுகா தேவிபுதல்வனே
முருகனைத்துதிசெயவருள் கஜமுக கணேசனே

வரசுகபாணி நவரஸவாக்கருள் வாணி
ஸாரஸிஜபவன் மகிழ்வின்பம தழைத்தகல்யாணி
சரவணோற்பவாகுமரா ஷண்முகவிபவா
ஸரஸகுஞ்சரிதழுவுந் தோளதமியேற்கருளவா
குமாரகுருபரா திருவருள் கொழிக்குஞ் சிற்பரா
அமரர்கோனுக் கன்புடனரசளித்த வேற்கரா
அமலநாயகா அடியவர்க்கிலதாயகா
சமரமயின்மீதென்முனைந்து தயைபுரிந்தகா
வரமருள் தூயா தொடர்கலிமாற்று முபாயா
பரமற் கருமைப்பொருளுரைத்த பக்தஸகாயா
குகனைப்போற்றுவோம் பெண்காள் குடிலமாற்றுவோம்
இகபரஸுகமளிக்குங் கந்தன் எழில்கள் சாற்றுவோம்
வெற்றிகொள் தீரன் பழநியில் விளங்குங்கம்பீரன்
குற்றமற்றவர்களுக்கு ஞானங்கொடுக்குமுதாரன்
வள்ளிமகிழ்சீலன் பவானிபாதருள் பாலன்
தெள்ளியதமிழ் புலவனடியார் தீவினைக்காலன்
சிவகிரிவாஸன் எனதுளந்திகழுமுல்லாசன்
பவமடைந்துழலாம லன்பரைப் பாலிக்கும் நேசன்






உ

சிவமயம்.

# எச்சரிக்கை.

சீரார் குறமாறுளணி செப்பார்தனமேவுங்
காரார்புய சமராபுரி சண்முகா வெச்சரிக்கை (1)

பிறைசூடிய சடையானருள்பிள்ளைப் பெருமாளே
மறையோர் நிறைபோரூர்வருமன்று யெச்சரிக்கை (2)

பனிமாமலைமிசை பூத்தருள் பச்சைக்கொடி தந்த
கனியே திருப்போரூர் வருகந்தா வெச்சரிக்கை (3)

அருமாமறை முதலோதியவானைக் கொருதுணையே
பரிபூரணசுகமே போரிப்பதியே வெச்சரிக்கை (4)

ஆறுவமுதனையாயயில் வேலாயுயர்வானோர்
சேனாபதி சமராபுரித் தேவா வெச்சரிக்கை (5)

தெய்வகுஞ்சரிகணவா பச்சைத்திருமாறிரு மருகா
சைவ நன்னெறிவளர் போரூர்ச் சண்முகா வெச்சரிக்கை

வேலாகுணசீலா கனலிலா விடைப்பாகன்
பாலா திருப்போரூர் வளம்பதியா வெச்சரிக்கை (7)

நவவீரர்கள்பணி நூபுரநளினத் திருவடியாய்
தவர்சூழ்தரு சமராபுரிச் சண்முகா வெச்சரிக்கை (8)

ஈராறுயர் தோளா தண்டைக் கிசைந்த பத்மத்தாளா
சீரார்திருப்போரூர் மயில்வீரா வெச்சரிக்கை (9)

கோழியங்கொடிபடைத்தாய் நல்லகுணத்தா யென்னை
யளித்தாய்
வாழியம்மலர்பபதத்தாய் போரிவரதா வெச்சரிக்கை(10)

பூவேபரிமளமே பறைப்பொருளே மயிலேறுங்
கோவேசுரர் தேவேபோரி வாழ்வே வெச்சரிக்கை (11)

பிரசமேபிரமரசமேதவர் பேசுங்கதிநலமே
சொரூபமே போரிநகர்வாழ் சுப்பிரமணியா வெச்ச
ரிக்கை (12)

மதுராருக்கிட விருநாசிற்சுகவடிவா சுப்பிரமணியா
சதுராதிருப் போரூர்வருசண்முகா வெச்சரிக்கை (13)

---

## எச்சரிக்கை.

சீர்வளருங்கதிர் மாமலை மேவிய செந்தமிழின் வாசா
இந்த—பாருலகத்தி லடியவர் போற்றிய
பாலகுமரேசா (1)

வானவர் தானவர் மாமுனிவோர்தொழு மாமயில்
வாகனனே—தொந்தி—யானை முகனுக்கிளைய
பராபரமாகிய வேலவனே (2)

பச்சை மரகத மேனியெனும் வாலை பார்வதி பாலகனே
ஐய—நச்சரவிற்றுயில் ராமன் மருமகனாகிய
வேலவனே (3)

கந்தாகடம்பா குகஞான சண்முகா—காலாயுதப்
பொருளே—உனை—வந்துபணிந்த அடியவர்க்கு
வரந்தந்திடு மெய்ப் பொருளே (4)

சூரர்கள்தேகந் திமிர்திடவேன தண்டுபடத்தானே
அதி—வீரமுள்ள வெற்றி வேல்விட்டெரிந்ததோ
ராறு முகத்தோனே (5)

வள்ளியைத்தேடி தினைப்புனந் தன்னிலே வந்த
தயாபரனே—மாது—அள்ளிக்கொடுக்குந் தினை
மாவை வாங்கி அருந்துந்தயாபரனே (6)

திருப்பரங்குன்றத்தில் தேவகுஞ்சரியை திருமணஞ்
செய்தோனே—ஐய—ஆறு படை வீடமர்ந்த
அமரர்கள் பெருமானே (7)

வள்ளிக்கிசைந்த வடிவுள செங்கை வளையல் சுமந்
தோனே—உந்தன்—புள்ளி மயில்மீதி லேறிவரந்
தருவாய் கந்தனே (8)

சிவமயம

## கட்டியம்.

சண்டப்ரசண்டவீ தண்டமுகண்டகோ-தண்டபாணிக்கி மருகன் தத்திமித்தாளமோ டொத்து நின்றாடல் புரி-சதா சிவன் பெற்ற முருகன் தண்டமிழ் நிறைந்திடும் அண்டரும் முனிவருந் தாம் வணங்கிய வேலவன் சாலோக சாமீப சாரூப சாயுஜ்ய சகலமோட்சாதி கார கர்த்தன் அகோ தெப்படி யென்றால் சாக்ஷாத் பரப்பிரம மூர்த்திக்கு புத்திராகியும் ஸ்ரீ மந்நாராயண மூர்த்திக்கு மருகராகியும் விக்னேஸ்வரருக் குச் சகோதராராகியும் வள்ளி தேவயானைக்கு மணவாளராகி யும் அண்டபகிரண்டமும் ஆயிரத் தெட்டண்டமும் இரு நூற்றிருபத்து நான்கு புவனமும் கோடாகோடி அண்டங் களும் சப்தசாகரமுஞ் சூழ்ந்த ஈரேழுபதினாலு லோகத்தை யும் ஏகசக்கரஞ் செலுத்தி ஒரு குடையின்கீழாளப்படா நின்ற தெண்டாயுதபாணி இன்றையதினம் சுவர்ணமயில் வாகனரூடராய் வெள்ளியிந்திர விமானத்தின் மீது ஆரோகணித்து ஆடல் பாடல் அனேக விதமான சங்கித வாத்தியத்துடன் அன்னக்கொடி கட்டி அன்ன தானம் சொர்னதானம் வஸ்திரதானம் பூதானம் கோதா னம் இன்னும் மற்றுமுள்ள தானங்களுஞ் செய்வதர்க் காக எண்ணிலாவணிகர் பொன்னிறைச் செய்த புனித ஆல யத்தில் முத்துடன் வயிரம் வைத்திழைத்த தமது தங்க இரத்தின சிம்மாசனக்கொலுவிற்கு எழுந்தருளி வருகின்றார் வெகு பராக் எச்சரிக்கை.

---

## கட்டியம்.

ஸ்ரீ ஹரி கருணைகடாட்ச வீட்சண்ய அலங்காரா உத்த ண்ட மண்டலீகரா வதனமோகன வசீகரா பஞ்சபாண அவ தாரா அஷ்ட ஐசுவரிய சம்பன்ன துஷ்ட நிக்ரகா சிஷ்ட பரி

பாலனை மந்த்ர மாணிக்கா மகுட அலங்காரா இந்திர சேகரா சர்வ உத்தண்டா அகிலாண்டகோடி பிர்மாண்ட நாயகா ஆயிரத்தெட்டண்டமும் இருநூற்றிருபத்துநான்கு புவனமும் கோடாகோடி அண்டங்களும் சப்தசாகரமுஞ் சூழ்ந்த ஈரேழுபதினாலு லோகத்தையும் ஏகசக்கரஞ் செலுத்தி ஒரு குடையின்கீழாளப்படாநின்ற சாக்ஷாத் சிவசுப்பிரமணியக் கடவுள் இன்றயத்தினம் சுவர்ணமயில்வாகனரூடராய் வெள்ளி இந்திரவிமானத்தின்மீது ஆரோகணித்து ஆடல்பாடல் அனேகவிதமான சங்கீத வாத்தியத்துடன் திருவடியார்களுக்கு தீர்த்தப்ரசாத விபூதியுங்கொடுத்து தமது தங்க இரத்தின சிம்மாசனக்கொலுவிற்கு எழுந்தருளி வருகின்றார் வெகுபராக் எச்சரிக்கை.



சிவமயம்

ஸ்ரீ சாம்பசதாசிவாய நம:

# அக்ஷரமாலிகா ஸ்தோத்ரம்.

சாம்பசதாசிவ சாம்பசதாசிவ சாம்பசதாசிவ சாம்ப சிவாஹர

அற்புதவிக்ரக வமராதீச்வர அகணிதகுணகண
அமித சிவாஹர — சாம்ப

ஆனந்தாம்ருத வாச்ருத ரக்ஷக ஆத்மாநந்த
மஹேச சிவாஹர — சாம்ப

இந்துகலாதர இந்த்ராதிப்ரிய சுந்தரரூப
சுரேச சிவாஹர — சாம்ப

ஈசசுரேச மஹேசஜனப்ரிய கேசவஸேவித
கீர்த்தி சிவாஹர — சாம்ப

உரகாதிப்ரிய பூஷணசங்கர நரகவிநாச
நடேச சிவாஹர — சாம்ப

ஊர்ஜிததானவ நாசபராத்பர ஆர்ஜிதபாவ
விநாச சிவாஹர — சாம்ப

ருக்வேதச்ருதி மௌளி விபூஷண அர்க்கசந்த்ராக்னித்ரு
நேத்ர சிவாஹர — சாம்ப

ரூபநாமாதிப்ரபஞ்சவிலட்சண தாபநிவாரண
தத்வ சிவாஹர — சாம்ப

லிங்கஸ்வரூப ஸபேசபுதப்ரிய மங்களமூர்த்தி
மஹேச சிவாஹர — சாம்ப

லூதாதீச்வர ரூபப்ரிய சிவவேதாந்தப்ரிய
வேத்ய சிவாஹர — சாம்ப

ஏகாநேக ஸர்வேச ஜனப்ரிய மங்களமூர்த்தி
மஹேச சிவாஹர — சாம்ப

ஐஸ்வர்யார்ச்சித சின்மயசிற்கன சச்சிதாநந்த
மஹேச சிவாஹர — சாம்ப

ஓங்காராதிப வரகவிபூஷண ஹ்ரீங்காரப்ரிய
யீச சிவாஹர — சாம்ப

ஔரஸலாளித அந்தகநாசன கௌரீசகித
கிரீச சிவாஹர — சாம்ப

அம்பரவாச சிதம்பரநாயக தும்புருநாரத
ஸேவ்ய சிவாஹர — சாம்ப

ஆஹாரப்ரிய வட்ட நிச்சல யோகி ஹ்ருதிப்ரிய
வாச சிவாஹரா சாம்ப
கமலாசனவர கைலாசாதிப கருணாஸாகர
காந்த சிவாஹரா சாம்ப
கட்கசூல ம்ருக டங்கதநுர்த்தா விக்ரமரூப
விசேஷ சிவாஹரா சாம்ப
கங்காகிரிஜா வல்லபகுணஹத சங்கரஸர்வ
ஜனேச சிவாஹரா சாம்ப
காதுகபஞ்சன பாதகநாசன போதசொரூப
பூரண சிவாஹரா சாம்ப
சாந்தஸ்வரூபா நந்தவஞ்சய வேத வேதாந்த
ஸ்வரூப சிவாஹரா சாம்ப
சண்டவிநாசன ஸகல ஜனப்பிரிய மண்டலாத நிச
மஹேச சிவாஹரா சாம்ப
சத்ரகிரீட சுகுண்டாதிப்ரிய புத்ரப்ரிய
புவனேச சிவாஹரா சாம்ப
ஜன்மஜரா மரணாதி விநாசன கல்மஹற விரஹித
காசி சிவாஹரா சாம்ப
ஜங்காராச்ருத ப்ருங்கிரி டீச்வர ஓங்காரேச
விஸ்வேச சிவாஹரா சாம்ப
ஞானக்யான விநாசன நிர்மலதீன ஜனப்ரிய
தீப்தி சிவாஹரா சாம்ப
டங்கர்யாவ்ருத தாருண சத்வர கிங்கர ஜேவ்ய
கிரீடி சிவாஹரா சாம்ப
டங்க ஸ்வரூப ஸஹஸ்ர கரோத்தம வாகிஸ்வர
தேவ சிவாஹரா சாம்ப
டம்ப விநாசன தாடிம பூஷண அம்பர வாச
கிலேச சிவாஹரா சாம்ப
டண்டண் டமருக டாரிம நிச்சல டுண்டி விநாயக
ஸேவ்ய சிவாஹரா சாம்ப
நளின விலோசன நடன மனோஹர அளிகுணபூஷண
அமித சிவாஹரா சாம்ப
தத்வமஸ்யாதி வாக்யார்த்த ஸ்வரூப நித்ய சொரூப
நிஜேஸ் சிவாஹரா சாம்ப
ஸ்தாவர ஜங்கம புவன விலக்ஷண வ்யாபக வரமுனி
சேவ்ய சிவாஹரா சாம்ப
தந்தி விநாசன நளின மனோஹர சந்தன லேபன
சரண சிவாஹரா சாம்ப

தரணீ தரதர தவள விபாவித தாணுதிப
ஸகவாத சிவாஹர — சாம்ப
நாகு மணிகண பூஷண நிர்க்குண நத ஜண போஷண
நாத சிவாஹர — சாம்ப
பார்வதி நாயக பன்னக பூஷண பராமாநந்த
பரேச சிவாஹர — சாம்ப
பால விலோசன பாநு கோடிப்ரிய ஹாலா ஹலதர
அமிர்த சிவாஹர — சாம்ப
பந்த விமோசன த்ருத சர்மாம்பர ஸ்கந்தாதிப்ரிய
கனக சிவாஹர — சாம்ப
பஸ்மவிலேபர பவபவ பஞ்சன விஸ்மயரூப
விசேஷ சிவாஹர — சாம்ப
மன்மத நாசன மதுரா நாயக சர்மவிபூஷண
வாஸுகி சிவாஹர — சாம்ப
யதிஜனஹ்ருதய நிவாஸித யீஸ்வர விஷ்ணுவாதி
சுசேவ்ய சிவாஹர — சாம்ப
ராமேச்வர ரமணி யமுகாபுஜ ஸோமேஸ்வர
சுகிருதேச சிவாஹர — சாம்ப
லங்காதீஸ்வர ஸேவித சுககர லாவண்யாம்ருத
லலித சிவாஹர — சாம்ப
வநஜா நந வர வாசுகிபூஷண வனமாலாதி
விபூஷ சிவாஹர — சாம்ப
சாந்த ஸ்வ ரூபாதிப்ரிய சுந்தர காந்திமதிப்ரிய
காசி சிவாஹர — சாம்ப
ஷண்முக ஜனக ஸுரேந்திர முனிப்ரிய ஷாட்குண்யாதி
ஸமேத சிவாஹர — சாம்ப
ஸம்சாரார்ணவ நாசன சாஸ்வத ஸாதுஹ்ருதிப்ரிய
வாஸ சிவாஹர — சாம்ப
ஹரபுருஷோத்தம ஆநந்தாம்ருத முராரிபு ஸேவ்ய
நடேச சிவாஹர — சாம்ப
லளிதா நந்தித ஜைத்ரவிஸ்வேஸ்வர காளி நடப்ரிய
காசி சிவாஹர — சாம்ப
அக்ஷர ரூபா திப்ரிய சுதந்தர சாஹிஜக
த்ரயஸ்வாமி சிவாஹர — சாம்ப
சங்கர நாராயண தீர்த்தப்ரிய சிவகங்காதீர
சுவாச சிவாஹர — சாம்ப
சாம்ப சதாசிவ சாம்ப சதாசிவ சாம்ப சதாசிவ
சாம்ப சிவாஹர — சாம்ப

முற்றும்.